*(உ) இவர்களில் 1958-59 ஆண்டில் எத்தனை பேர்களுக்கு உயர் நிலைப் பள்ளிகளில் செகண்டரி கிரேடு உயர்வு கிடைத்தது?*

*(எ) புதிதாக செகண்டரி கிரேடு தேர்ச்சி பெற்ற எத்தனை ஆசிரியர்களுக்கு உயர்நிலைப் பள்ளிகளில் வேலை தரப்பட்டது?*

THE HON. SRI C. SUBRAMANIAM : *(அ), (இ) (உ) & (எ)* : The Government have no information. The time and labour involved in gathering these particulars will not be commensurate with the object in view.

**SRI S. M. ANNAMALAI** : *செகண்டரி கிரேட் உத்தியோகத்தில் மூன்று நான்கு ஆண்டுகள் இருந்தவர்களுக்கு உத்தியோக உயர்வு கொடுக்கவில்லை. மூன்று நான்கு ஆண்டுகள் உயர்நிலைப் பள்ளியில் உத்தியோகத்தில் இருந்தால் அவர்களுக்கு செகண்டரி கிரேட் உயர்வு கொடுக்கவேண்டுமென்று சர்க்கார் உத்திரவு இருந்தும் கூட அவர்களை விட்டுவிட்டு புதிதாக பரிட்சையில் தேறி வந்தவர்களை நேரடியாக உயர்நிலைப் பள்ளிகளில் நியமிக்கிறார்கள். இதை மாற்றியமைக்க சர்க்கார் முன்வருமா?*

**THE HON. SRI C. SUBRAMANIAM** : *குறிப்பாக இம்மாதிரி எங்காவது நடந்திருந்தால் இதைப்பற்றி கனம் அங்கத்தினர் எழுதினால் கவனிக்கச் சொல்கிறேன்.*

*Export of tamarind and chillies*

*** 27 Q.—SRI V. K. KOTHANDARAMAN** : *கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதில் அளிப்பாரா—*

*1958-ம் ஆண்டிலும், 1960-வது ஆண்டிலும் ஏற்றுமதி ஆன புளி, மிளகாய் எவ்வளவு?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM : It is presumed that the hon. Member is referring only to exports from this State to foreign destinations. If so, the quantities so exported are—

| | | |
|---|---|---|
| **1958** | **Chillies** .. .. .. .. .. | **4,672 tons.** |
| | **Tamarind** .. .. .. .. | **3,002 ,,** |
| **1960** | **(From January 1960 to September 1960).** | |
| | **Chillies** .. .. .. .. .. | **3,204 tons** |
| | **Tamarind** .. .. .. .. | **250 ,,** |

Figures of foreign exports of these commodities from October 1960 onwards are not readily available.

**SRI V. K. KOTHANDARAMAN** : *புளி, மிளகாய் இவைகளை இன்ன அளவுதான் ஏற்றுமதி செய்யவேண்டுமென்ற கட்டுப்பாடு இல்லாத காரணத்தால் பெரிய வியாபாரிகள் ஏராளமாக ஏற்றுமதி செய்வதன் காரணமாக விலைவாசிகள் மேலும் மேலும் அதிகப் பட்டுக்கொண்டே போகிறது என்பதை கனம் அமைச்சர் அவர்கள்*

20th January 1961]

உணர்வார்களா? ஆகையால் நமது தேவையைப் பூர்த்தி செய்யக்கூடிய அளவிற்கு குறைந்த விலையில் இருக்கும் அளவிற்கு ஏற்றுமதி செய்யாமல் இருப்பதற்கு சர்க்கார் முயற்சிக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: யாரும் இஷ்டம் போல் ஏற்றுமதி செய்ய முடியாது. அப்போதைக்கப்போது எவ்வளவு ஸ்டாக், எவ்வளவு தேவை என்பதை எல்லாம் பார்த்து நிலைமையை உத்தேசித்து மத்திய அரசாங்கம் முடிவு செய்கிறது. அவ்வாறு முடிவு செய்யும்போது அந்தந்த ராஜ்யத்திலிருந்து ஏற்றுமதி செய்வதைப்பற்றி அந்தந்த ராஜ்யங்களைக் கலந்து கொண்டுதான் முடிவு செய்யப்படுகிறது.

SRI A. GOVINDASAMY: விலைவாசி ஏற்றத்தை தடுக்கும் பொருட்டாவது உடனடியாக ஏற்றுமதி திட்டத்தை தடை செய்ய அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: 1960-ம் ஆண்டு புளி ஏற்றுமதி மிகவும் குறைவாக இருக்கிறது என்பதை புள்ளி விவரத்திலிருந்து கனம் அங்கத்தினர் அவர்கள் கவனித்திருப்பார்கள். விவசாயப்பொருளை ஓரளவு ஏற்றுமதி செய்வதற்கு முற்பட வேண்டும், அன்னிய மார்கெட்டை பிடிக்கவேண்டும் என்பதையும் கனம் அங்கத்தினர் பாராட்டுவார் என்று நினைக்கிறேன்.

SRI K. B. S. MANI: அன்னிய செலாவணிக்கு வேண்டி அவைகளை ஏற்றுமதி செய்வதன் காரணமாக இங்கு இருக்கும் ஏழை மக்கள் புளி, மிளகாய் போன்றவைகளை வாங்க முடியாமல் மிகவும் சிரமப்படுவதால் மற்ற ராஜ்யக் கோட்டாக்களைக் காட்டிலும் நம்முடைய ராஜ்யக் கோட்டாவைக் குறைத்து நிர்ணயம் செய்வதற்கு மத்திய அரசாங்கத்திற்கு நம்முடைய அரசாங்கம் எடுத்துச்சொல்லுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: முன்பே விடை அளித்தேன். அந்தந்த ராஜ்யங்களில் இருக்கும் நிலைமையை ஒட்டி அந்தந்த ராஜ்யங்களைக் கலந்துகொண்டு ஏற்றுமதி எவ்வளவு என்பதை நிர்ணயிக்கிறார்கள். குறிப்பிட்ட அளவிற்கு மேல் ஏற்றுமதி செய்வதில்லை. இதை உற்பத்தி செய்கின்றவர்களுக்கு விலை கட்டுப்படியாக வேண்டும். அதையும் கனம் அங்கத்தினரவர்கள் கவனிக்கவேண்டும்.

SRI V. SUBBIAH: உற்பத்திச் செலவை நிர்ணயித்து ஏற்றுமதி கோட்டாவை கொடுக்கிறார்களா? இன்று விலைவாசிகள் மிக 9-00 a.m. ஏற்றத்தாழ்வாகயிருக்கிறது. வற்றல் விலை 300, 350 ரூபாயாக இருந்தது இன்று 130, 150 என்று இருக்கிறது. ஆகவே, விவசாயிகளைப் பாதிக்காத அளவு ஏற்றுமதி அளவை நிர்ணயித்து வியாபாரிகளுக்கு கிடைக்கக் கூடிய லாபம் விவசாயிகளுக்கு கிடைக்கக் கூடிய அளவிற்கு ஏதாவது ஏற்பாடு செய்ய முடியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முக்கியமாக உற்பத்தி செய்கிற விவசாயிகளும், அதை வாங்கிச் சாப்பிடக் கூடிய பொது மக்களும், இருசாராருக்கும் விலைவாசி எவ்வளவு தூரம் சரசமாக இருக்க வேண்டுமென்பதை வைத்துக் கொண்டுதான் அப்போதைக்கப்போது ஏற்றுமதி செய்வது நிர்ணயிக்கப் படுகிறது.

SRI V. K. KOTHANDARAMAN : கனம் அமைச்சர் அவர்கள் ஏற்றுமதி செய்யும் விஷயமாக, நமது ராஜ்யத்தை கலந்துதான் நிர்ணயிக்கப்படுகிறது என்று சொல்கிருர்கள். இதில் நான் தெரிந்து கொள்ள விரும்புவது, ஏற்றுமதி செய்யக் கூடிய வியாபாரிகளுக்கு இன்ன அளவிற்குத்தான் ஏற்றுமதி செய்யலாம் என்று கட்டுப்பாடு விதிக்கப்படுகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்போதைக்கப் போது மொத்தத்தில் எவ்வளவு ஏற்றுமதி செய்வது, எந்தெந்த வியாபாரிகள் மூலம் அல்லது கூட்டுறவு சங்கங்கள் மூலம் ஏற்றுமதியாவது என்பதெல்லாம் நிர்ணயிக்கப்பட்டு, வேண்டிய கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

SRI R. KRISHNASAMI NAIDU : மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி இந்த மூன்று ஜில்லாக்களின் அனுபவத்தை வைத்துப் பார்க்கும்போது மிளகாய் சாகுபடி செய்யும் விவசாயிகள், ஏக்கர் ஒன்றுக்கு 500 முதல் ஆயிரம் வரை செலவிட்டுத்தான் அந்த விவசாயத்தை செய்ய முடிகிறது. கிணற்றுத் தண்ணீர் இரவைப் பாசன வசதியுள்ள இடத்தில்தான் இந்த சாகுபடி செய்யப்படுகிறது. உற்பத்தியாளருக்கு பாதகம் அல்லாத முறையில் இந்த ஏற்றுமதி அளவை சர்க்கார் நிர்ணயித்து வருகிருர்களா ? அதுவும் கவனத்தில் வைத்துக் கொள்ளப் படுகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதுபற்றியும் நான் சற்று முன்பு குறிப்பிட்டேன். ஏற்றுமதியை அடியோடு நிறுத்துவது என்ருல், அங்கத்தினர் அவர்கள் குறிப்பிட்ட ஜில்லாக்களில் உள்ள மிளகாய் உற்பத்தி செய்கிற விவசாயிகள் எங்களுக்கு விலை குறைந்து விடும் என்று புகார் சொல்கிருர்கள்.

*Teachers' Pension Scheme*

* 28 Q.—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஆசிரியர் பென்ஷன் திட்டமானது "Secondary Grade' L.T., B.T.," ஆசிரியர்களுக்கும் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறதா ?

(இ) அப்படியாயின் எந்தெந்த பள்ளிக்கூடங்களிலே வேலை செய்துவரும் ஆசிரியர்களுக்கு விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது ?